


# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் - 1 ஏப்ரல் - ஜீன் - 2017 இதழ் - 2

குருத்தோலை ஞாயிறு பவனி (ஆந்திரா கிராம சபை)

**தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா! கர்த்தரின் நாமத்தினாலே வருகிறவர் ஸ்தோத்தரிக்கப்பட்டவர், உன்னதத்திலே ஓசன்னா என்று சொல்லி ஆர்ப்பரித்தார்கள்.**

**(மத். 21:9)**



பெருமதிப்பிற்குரிய Rev. J. விக்டர் ஞானராஜ் (சேகரத்து போதகர், மத்திகோடு ) அவர்கள்
போதகர் Rev. சுந்தர்ராஜ் அவர்களுக்கு நியூஹோப் மிஷன் சார்பாக மருத்துவ சிகிட்சைக்கான உதவி வழங்கல்

# மிஷனரிகளுக்கு மருத்துவ உதவி செய்தல்



மிஷனரி பணிக்களங்களில் பணியாற்றும் பணியாளர்கள் தேவ ராஜ்யத்தின் மகிமையான பணியை செய்து வருகின்றனர். அவ்வாறு பணியாற்றும்போது மிஷனரிகள் சந்திக்கும் இன்னல்கள், இடர்பாடுகள் ஏராளம் ஏராளம். இத்தனை இடர்களுடன் சில மிஷனரிகள் உடல் ஆரோக்கியம் சார்ந்த பல்வேறு நோய் நொடிகளுக்கு ஆளாகின்றனர். அவ்வித நோய்கள் தாக்கும்போது சில மிஷனரிகள் உரிய சிகிட்சைக்கான நிதி வசதியின்றி தவித்து வருகின்றனர்.

இவ்வித இக்கட்டான வேளைகளில் மிஷனரிகளின் சிறந்த மருத்துவ சிகிட்சைக்கு புதுநம்பிக்கை மிஷன் உதவி செய்து வருகிறது. ஏழை மிஷனரிகள் மருத்துவ சிகிட்சைக்கு கருத்துடன் ஜெபிப்போம். உதவ முன்வருவோம்.

Address:-
Newhope Mission
75/33, Isaac Street,
Nagercoil - 629001

மேலும் விபரங்களுக்கு தொடர்பு கொள்ள: 9442935233




## புது நம்பிக்கை வெளியீடுகள்

வேதாகமத்தின் ஆழமான சத்தியங்களை புரிந்து கொள்ள "யூத பண்பாடும் வசன விளக்கமும்" என்னும் நூல் வெளிமிடப்பட்டுள்ளது. வேத வசனங்களில் வரலாற்று மற்றும் கலாச்சார பின்னணியில் வசனங்களை புரிந்து கொள்ளவும் ஆவிக்குரிய முறையில் விசுவாசிகள் வளரவும் பயனுள்ள விளக்கங்கள் இப்புத்தகத்தில் உள்ளன. அனைத்து கிறிஸ்தவர்களும் படிக்க வேண்டிய புத்தகம். வேதாகம பள்ளி மாணவர்கள் மற்றும் ஆசிரியர்களுக்கு பரிசளிக்க தகுந்த சிறந்த புத்தகம்.

குறிப்பு:- அனைத்து கிறிஸ்தவ புத்தக நிலையங்களிலும் கிடைக்கும்
தொடர்பு எண்: 9442935233

# புது நம்பிக்கை

பெறுவோம்! கொடுப்போம்!!

மலர் - 1 ஏப்ரல் - ஜூன் - 2017 இதழ் - 2

## உள்ளே . . .



ஆசிரியர்

S. மோசஸ் ராஜ்

ஆசிரியர் குழு

C. பால் பென்னட் சிங்

ஆ. ரவி குமார்

S. வசந்த நேசம்

முகவரி :

புது நம்பிக்கை

75/33, ஐசக் தெரு,

நாகர்கோவில் - 629 001

தொடர்பு எண்கள்.

7502071054

9442935233

9789183072

தனி பிரதி. 10/-

ஆண்டு சந்தா. 100/-

ஆயுள் சந்தா. 2000/-

தனி சுற்றுக்கு மட்டும்

**இயக்குநர் மடல்!**

*கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!*
*உயிர்த்தெழுந்த ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் உன்னத நாமத்தில் வாழ்த்துக்கள்.*

கல்வாரி சிலுவையில் நமது பாவங்களுக்காக அடிக்கப்பட்டு, மரித்து, அடக்கம் செய்யப்பட்ட இயேசு மூன்றாம் நாள் உயிர்த்தெழுந்தார். இது ஒரு சரித்திர உண்மை என நிரூபிக்கப்பட்டுள்ளது. உலக சரித்திரத்தில் மரித்த பின்பு உயிர்த்தெழுந்து, இன்றும் உயிரோடு மகிமையுடன் வாழ்பவர் இயேசு கிறிஸ்து மட்டுமே.

காலியாக இருந்த கல்லறை, சிலுவையிலறையப்பட்ட போது பயந்து ஓடின அப்போஸ்தலர்கள் அவர் உயிர்த்தெழுந்த பின்பு மிகுந்த தைரியத்துடன் இயேசுவைக் குறித்து பிரசங்கித்தது போன்றவை இயேசு உயிர்த்தெழுந்தார் என்பதற்கு சான்றுகளாகும். எல்லாவற்றுக்கும் மேலாக அக்காலத்தில் யூத மத வைராக்கியத்தால், கிறிஸ்தவர்களை கொலை செய்து வந்தார் சவுல் என்னும் ஒருவர். பின்பு அந்த கிறிஸ்தவ எதிர்ப்பாளரே இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்தார் என சான்றுகளுடன் பிரசங்கித்தார். எழுதினார் (1 கொரி.15) இப்படி சவுல் மனம்மாறி பவுல் என்னும் பெயரில் கிறிஸ்துவைக் குறித்து பிரசங்கித்தார். பவுல் அப்போஸ்தலரின் மன மாற்றம் இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுந்தார் என்பதற்கு வலுவான சான்று ஆகும்.

இந்த உயிர்த்தெழுந்த இயேசுவை விசுவாசிப்பது நம்மை இரட்சிக்கிறது. ரோமர் 10:9 கூறுகிறது ''கர்த்தராகிய இயேசுவை நீ உன் வாயினாலே அறிக்கையிட்டு தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினாரென்று உன் இருதயத்திலே விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய்''. கிறிஸ்து உயிர்த்தெழுந்ததை விசுவாசிப்பது மட்டுமே நம்மை இரட்சிக்கும்.

உயிர்த்தெழுந்த இயேசு கிறிஸ்து தாமே உங்கள் வாழ்வில் ''புதுநம்பிக்கை'' தருவாராக.

கிறிஸ்துவின் பணியில், சகோ. ஆ. ரவி குமார்

# உற்சாக மனதின் ஆசீர்வாதங்கள்

உற்சாகம் என்ற சொல்லை கேட்டவுடனேயே நம் எல்லோருக்கும் புது உற்சாகம் பிறந்துவிடும் அல்லவா ? உற்சாகமாக இருப்பது, உற்சாகமாக நமது கடமைகளை செய்வது எல்லாம் நமது மனதையும் உடலையும் உற்சாகமாக வைத்துக்கொள்ள உதவும். சிலர் தாங்கள் உற்சாகமாக இருப்பதுடன் நின்றுவிடாமல் தங்களை சுற்றிலும் இருப்போரையும் எப்போதும் உற்சாகமாக வைத்துக்கொள்வர்.

ஆயினும் சிலர் நல்லதை செய்தாலும் உற்சாகம் இல்லாமல் செய்வது உண்டு. பைபிளில்அமத்சியா என்னும் யூதா ராஜா இதற்கு ஒரு உதாரணம். அவன் கர்த்தரின் பார்வைக்கு செம்மையானதைச் செய்தான், ஆனாலும் முழுமனதோடே அப்படி செய்யவில்லை. (2 நாளா. 25:2) முழு மனதோடே செய்யவில்லை என்பது அவன் உற்சாகமாக செய்யவில்லை என்பதை காட்டுகிறது. இந்த அமத்சியா ராஜாவைப் போலவே சில வேளைகளில் நாம் இருந்து விடுவதற்கு வாய்ப்பு உண்டு.ஆகவே கிறிஸ்தவர்களாகிய நாம் அமத்சியா ராஜாவைப் போல் செம்மையானமதை மட்டும் செய்வதுடன் நின்றுவிடாமல் முழுமனதுடன் நன்மை செய்ய வேண்டும். உற்சாக மனதுடன் செய்ய வேண்டும்.

### i) ஆராதனையில் உற்சாகம்

உற்சாகத்துடன் நான் உமக்கு பலியிடுவேன்; கர்த்தாவே, உமது நாமத்தைத் துதிப்பேன், அது நலமானது. (சங்.54:6) பழைய ஏற்பாட்டு காலத்தில் ஒருவர் தேவனை ஆராதிக்க வேண்டும் எனில் முதலில் தன் பாவத்திற்காக பலி செலுத்த வேண்டும். பாவத்திற்கான பலி செலுத்தப்பட்டதால் அவரது பாவம் மன்னிக்கப்படும். (சங்.32:1) பாவ மன்னிப்பை பெற்றுக்கொண்ட அந்த மனிதன், தனது பாவத்தை தேவன் மன்னித்தார் என்ற விசுவாசத்துடன் உற்சாகமாக தேவனுக்கு துதி செலுத்துகிறான். பலி செலுத்துதல் ஆராதனையின் முதல் பகுதி எனில், துதி செலுத்துல் ஆராதனையின் இரண்டாம் பகுதியாகும். இரண்டும் முழுமனதுடன் செய்யப்படும்போது அது உண்மையான ஆராதனை ஆகிறது. (உபா.6:5).

புதிய ஏற்பாட்டில் நமது பாவத்துக்காக நித்திய பலியாக பாவம் இல்லாத இயேசு கிறிஸ்து நமக்காக பலியானார். அவரது தியாக பலியை நாம் விசுவாசித்து ஏற்றுக்கொள்ளும்போது நமது பாவங்கள் மன்னிக்கப்பட்டு, நாம் நீதிமான்கள் ஆக்கப்படுகிறோம். (2கொரி. 5:21; யோவா. 1:12) பாவ மன்னிப்பை தேவன் இயேசு கிறிஸ்து மூலம் தேவன் நமக்கு அருளியபடியால் நாம் அவரை துதிக்க வேண்டும், உற்சாகமாக ஆராதிக்க வேண்டும் கர்த்தரின் ஆராதனைகளில் நாம் உற்சாகமாக பங்கெடுக்க வேண்டும். (எபி. 10:25; 13:15)

## ii) கர்த்தருடைய வழிகளில் உற்சாகம்

''கர்த்தருடைய வழிகளில் அவர் இருதயம் உற்சாகம் கொண்டது; அவன் மேடைகளையும் விக்கிரகத் தோப்புகளையும் யூதாவை விட்டகற்றினான்'' (2நாளா.17:16) ''கர்த்தருடைய வழிகள்'' என்னும் பழைய ஏற்பாட்டுப் பதம் ''கர்த்தருடைய வார்த்தையை'' குறிப்பதாகும். விசேசமாக பத்து கட்டளைகளை குறிக்கும். பத்து கட்டளைகளில் ஒரு கட்டளை ''என்னையன்றி உனக்கு வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம். யாதொரு விக்கிரகத்தையும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம்'' (யாத்.20:3,4) கர்த்தருடைய வழிகளில் (வார்த்தையில்) உற்சாகம் கொண்ட யோசபாத் ராஜா, தனது நாட்டிலிருந்து விக்கிரகங்களை அகற்றினான். அத்துடன் தன் நாட்டு மக்களுக்கு கர்த்தருடைய வேத புத்தகத்தை போதித்தான். (2நாளா.17:9) ஆகவே அவன் வெற்றியான, கர்த்தரால் ஆசீர்வதிக்கப்பட்ட ஒரு யூத ராஜாவாயிருந்தான். அவனது அண்டை நாட்டு ராஜாக்கள் அவனோடு யுத்தம் செய்ய பயந்தார்கள். நாமும் கர்த்தருடைய வழிகளில் உற்சாகம் கொண்டால், அவரது வசத்திற்கு உரிய முக்கியத்துவத்தை கொடுத்தால், அதனை படித்தால், தியானித்தால், கர்த்தருடைய ஆசீர்வாதம் எப்போதும் நம்மீது இருக்கும். (வெளி. 1:3) நாம் பிறருக்கு ஆபிரகாம் போல ஆசீர்வாதமாய் இருப்போம். (ஆதி.12–2).

## iii) சுவிசேஷ பணியில் உற்சாகம்

சுவிசேஷத்தை நான் பிரசங்கித்து வந்தும் மேன்மை பாராட்ட எனக்கு இடமில்லை; அது என்மேல் விழுந்த கடமையாயிருக்கிறது; சுவிசேஷத்தை நான் பிரசங்கியாதிருந்தால் எனக்கு ஐயோ. நான் உற்சாகமாய் அப்படி செய்தால் எனக்கு பலன் உண்டு. உற்சாகமில்லாதவனாய்ச் செய்தாலும், உக்கிராண உத்தியோகம் எனக்கு ஒப்புவிக்கப்பட்டிருக்கிறதே. (1கொரி.9:16,17). இந்த இரண்டு வசனங்களும் அப். பவுல் எவ்வாறு சுவிசேஷ பணி செய்தார் என்பதை நமக்கு படம் பிடித்து காட்டுகிறது. தேவன் கொடுத்த அந்த பணியை உற்சாகமாய் அவர் செய்தார் என விளங்க முடிகிறது. சுவிசேஷ பணியை அவர் உற்சாகமாக செய்தபடியால் கிறிஸ்துவின் பணிக்காக அநேக துன்பங்களை அனுபவித்தார். அந்த துன்பங்கள் அவரது உற்சாகத்தை குறைக்கவில்லை. துன்பத்திலும் உற்சாகத்துடன் பணி செய்த அவரால் அநேக சபைகளை கட்ட முடிந்தது. பிற எல்லா அப்போஸ்தலரையும் விட அதிக சபைகளை பவுல் கட்டினார். நாம் கர்த்தர் நமக்குத் தந்த எந்த பணியாக இருப்பினும் அதனை உற்சாகமாக செய்தால், பவுல் அப்போஸ்தலரைப் போல் நமது பணிகளில் நாமும் சாதனையாளர்களாக மாறுவோம். நமது பணிகளை உற்சாகமாய் பணிசெய்கிறோமா ?

## iv) கொடுத்தலில் உற்சாகம்

அவனவன் விசனமாயுமல்லா, கட்டாயமாயுமல்ல, தன் மனதில் நியமித்தபடியே கொடுக்கக்கடவன்; உற்சாகமாய் கொடுக்கிறவனிடத்தல் தேவன் பிரியமாயிருக்கிறார். (2 கொரி. 9:7) கொடுத்தலை கொடுத்து பிரசங்கிப்பது அல்லது போதிப்பது சபைகளில் சிலருக்கு வெறுப்பை தருவதாக இந்நாட்களில் இருக்கிறது. ஏனென்றால் சில சபைகளில் எப்போதும் பணத்தையே குறிவைத்து பிரசங்கிப்பதாக சபை மக்கள் முறுமுறுப்பதை கேட்கிறோம். சில வேளை தசம பாகம் குறித்து மட்டும் சில சபைகளில் பிரசங்கிக்கிறார்கள் என மக்கள் தங்கள் சபையையே குறை கூறுவதும் ஆச்சரியமாயிருக்கிது!

கொடுத்தலை குறித்த உண்மை என்ன ? பழைய ஏற்பாட்டு காலத்தில் தசம பாகம் என்பது யூதர்களுக்கு மோசே நியமித்த ஒரு கட்டளை. பழைய ஏற்பாட்டுகால மக்கள் பல வேளைகளில் தசமபாகத்திற்கும் அதிகமாய் கர்த்தரின் பணிகளுக்கு கொடுத்ததாக பார்க்கிறோம். அவைகள் உற்சாக காணிக்கைகள் என அழைக்கப்பட்டன. (2நாளா. 31:14, யாத். 36:3–5). ஆனால் புதிய ஏற்பாட்டு கால சபை மக்களுக்கு தசம பாகம் என்பது ஒரு கட்டளை அல்ல. புதிய ஏற்பாட்டில் தசமபாகம் குறித்து கூறும் ஒரு சில வசன பகுதிகளும் யூதர்களை தொடர்பு படுத்தியே வருகிறது. ஆகவே புதிய ஏற்பாட்டு கால மக்களுக்கு தசமபாகம் என்பது ஒரு கட்டாய போதனை என கூற முடியாது. அப்படி எனில் கிறிஸ்தவர்களாகிய நாம் எப்படி கொடுக்க வேண்டும் ?

தன் மனதில் நியமித்த படியே கொடுக்க கடவன்! ஒரு கிறிஸ்தவன் தன் மனதில் எதை (எவ்வளவு) கர்த்தரின் பணிக்கு கொடுக்க வேண்டும் என தீர்மானிக்கிற உரிமை அவனுக்கு உண்டு. யாரும் ஒரு சபை விசுவாசியை கொடுத்தல் குறித்து கட்டாயப்படுத்த முடியாது. ஆனால் ‘‘உற்சாகமாய் கொடுக்கிறவனிடத்தில் தேவன் பிரிமாயிருக்கிறார்’’ என்பதே மகிழ்ச்சியான செய்தி.

பிலிப்பிய சபை அதிகமாக பவுல் செய்த மிஷனெரி பணிகளை தாங்கியது. உற்சாகமாய் கொடுத்தார்கள். ஆகவே பவுல் அவர்களை ஆசீர்வதித்தார். ‘‘என் தேவன் தம்முடைய ஐசுவரியத்தின்படி உங்கள் குறைவையெல்லாங் கிறிஸ்து இயேசுவுக்குள் மகிமையிலே நிறைவாக்குவார்’’ (பிலி. 4:19)

தேவனுடைய பிள்ளைகளான நாமும் எப்போதும் உற்சாகமாக இருக்க வேண்டும். உற்சாகமாக ஆராதிக்க வேண்டும். உற்சாகமாக கர்த்தருடைய பணிகளை செய்ய வேண்டும். தேவன் உங்கள் மேல் பிரியமாயிருப்பார். உங்கள் மனது உற்சாகம் உடையதாகவும், வாழ்வு மகிழ்ச்சி நிறைந்ததாகவும் இருக்க தேவன் கிருபை செய்வாராக!

**- H.R.K.**



# மிஷனரி அறிமுகம்

**பணிக்களம் :** கைகா, உத்தர கர்நாடக் மாவட்டம்
**மாநிலம் :** கர்நாடகா
**மிஷனெரி :** பிரபாகர் ராவ் ஆசாதி

இப்பணிக்களம் சுவிசேஷத்துக்கு பாலைவனம் அன அறியப்பட்ட கர்நாடக மாநிலத்தில் அமைந்துள்ளது. உத்தர கர்நாடக் மாவட்டத்தில் கைகா பகுதியில்இவர் சுவிசேஷ பணி செய்து வருகிறார். முப்பது ஆண்டுகளுக்கு முன் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டது முதல் இவர் மிஷனெரி பணியை பல்வேறு சிரமங்கள் மத்தியிலும் மிகுந்த உற்சாகத்துடன் கர்த்தருடைய தோட்டத்தில் செய்து வருகிறார்.

இவருக்கு மனைவி, மற்றும் மூன்று பிள்ளைகள் உண்டு. பிள்ளைகள் படித்து வருகிறார்கள்.

இப்பணிக்களத்தில் சுமார் இருபத்தைந்து குடும்பங்கள் ஆண்டவரை ஏற்றுக்கொண்டு சபைக்கு வருகிறார்கள். இந்த மக்களின் ஆவிக்குரிய வளர்ச்சிக்காக ஜெபித்துக்கொள்ளுங்கள். மேலும் இந்த மிஷனெரியின் குடும்பத்தின் தேவைகளை கர்த்தர் பரிபூரணமாக சந்திக்கும்படி நமது ஜெபங்களில் நினைத்துக்கெள்வோம்.

மிஷனெரியின் மாத உதவி ரூ.3000/– சந்திக்கப்பட தவறாமல் ஜெபிப்போம்.

---

# முன்னேற்ற பணியாளர்கள் தேவை

மிஷன் பணிக்களங்களில் பணியாற்றும் மிஷனரிகளுக்கு **புதுநம்பிக்கை** மிஷன் பல்வேறு வகைகளில் உதவி செய்து வருகிறது. மிஷனரிகளுக்கு உதவி செய்யும் மிஷனரி பணியில் ஆர்வமுள்ள தன்னார்வ முன்னேற்ற பணியாளர்கள் தேவை. தாங்கள் வாழ்ந்து வரும் பகுதியிலேயே இப்பணிகளை செய்யலாம். மிஷனரி பணியில் ஆர்வமுள்ள கிறிஸ்தவ சகோதரர் / சகோதரிகள் இப்பணிகளை ஜெபத்துடன் செய்யலாம். (நேரில் வர விரும்புவோர் முன் நேரம் குறித்து வரவும்)


எமது அலுவலக முகவரி:
**புது நம்பிக்கை மிஷன்**
75/33, ஐசக் தெரு, நாகர்கோவில் - 629 001.
தொடர்பு எண் : 9442935233

# மீட்பு

பிதா, குமாரன், பரிசுத்த ஆவியானவராகிய திரியேக தேவனுக்கு மகிமை உண்டாவதாக. இந்த இதழின் மூலமாய் உங்களை சந்திப்பதில் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். நாம் கடந்த இதழிலே இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தின் (மரணத்தின்) மூலமாய் நமக்கு கிடைக்கிற நன்மைகளைப் பற்றி பார்த்தோம். இந்த செய்தியில் அதன் தொடர்ச்சியாக நம் இரட்சிப்போடு சம்மந்தப்படக்கூடிய மீட்பைக் குறித்து பார்ப்போம்.

### மீட்பு என்றால் என்ன ?

பைபிளிலே மீட்பு (Redemption, Redeem) என்கிற பதமும் நிகழ்வும் நிறைந்து காணப்படுகிறது. இது நம்முடைய இரட்சிப்போடு சம்மந்தப்பட்ட முக்கியமான அம்சங்களுள் ஒன்றாகும். மீட்பு என்றால் சிறைப்படுத்தப்பட்ட பொருளையோ அல்லது நபரையோ அதற்குரிய மீட்பின் கிரயத்தை (Ransom) செலுத்தி மீட்டுக்கொள்வதே மீட்பு ஆகும். பழைய ஏற்பாட்டில் இஸ்ரவேலர் எகிப்திய அடிமைத்தனத்திலிருந்து பஸ்காவின் மூலமாய் மீட்கப்பட்டனர். ரூத் போவாஸ் என்கிற உறவின் முறையான் மூலமாக மீட்கப்பட்டாள். நாம் பாவத்தின் வல்லமையிலிருந்தும் நியாயப்பிரமாணத்தின் சாபத்திலிருந்தும் இயேசு கிறிஸ்துவின் மூலமாக மீட்கப்பட்டிருக்கிறோம். (ரோ. 3:24, கொலோ. 1:14) நாம் கிரயத்திற்கு கொள்ளப்பட்டிருக்கிறோம் (1 கொரி. 6:20, 7:23)

பைபிளில் மீட்பைக் குறிக்கும் எபிரேய (ப.ஏ) மற்றும் கிரேக்க பதங்கள்:-

### எபிரேய பதங்கள்:

| | |
|---|---|
| பதா (padha) | – உபா 7:8, சங். 78:42, ஏசா. 1:27 |
| கோபேர் (kopher) | – லேவி. 1:4, லேவி. 16:6–34, தானி. 9:24 |
| கால் (gaal) | – ரூத் 2:20, ரூத் 4:4, ஏசாயா 52:3 |

### கிரேக்க பதங்கள்:

| | |
|---|---|
| லூத்ரோன் (Lutron) | – மத் 20:28, தீத். 2:14, எபி. 9:12 |
| அகோராஸோ (Agorazo) | –வெளி 5:9, கலா. 3:13 |

### நமக்கு ஏன் மீட்பு தேவை:–

மனிதர்கள் அனைவரும் பாவிகள் (ரோ. 3:23) நம்முடைய பாவமே தேவனுக்கும் நமக்கும் இடையில் பிரிவினை ஏற்படுத்துகிறது. (ஏசா. 59:2). நாம் அக்கிரமங்களிலும் பாவங்களிலும் மரித்தவர்களாயிருந்தோம். (எபே. 2:1)

இதினிமித்தம் மரித்திருக்கிற நாம் நம்மை நாமே காப்பாற்றிக்கொள்ள இயலாது. பாவத்தின் தண்டனை தேவனுடைய நியாயத்தீர்ப்பே. (ரோ. 2:6, வெளி. 20:11–15). நம்முடைய இந்த பரிதாபமான நிலைமையிலிருந்து விடுவிக்க தேவனாலே மட்டும்தான் முடியும்.

## தேவனுடைய மீட்பின் திட்டம்:

1 பே. 1:20ன் படி நம்முடைய மீட்பின் திட்டமானது நித்தியத்திலே தீர்மானிக்கப்பட்டுவிட்டது. மனிதன் படைக்கப்படும் முன்பாகவே தேவன் இயேசுகிறிஸ்துவின் மூலமாய் நம்மை மீட்டு இரட்சிப்பதற்கு திட்டம் கொண்டார்.

## மீட்பர் யார் ?

பைபிளின் படி தேவ திட்டத்தில் இயேசு கிறிஸ்து மட்டுமே நம்முடைய மீட்பராக கூறப்படுகிறார். நாம் இரட்சிக்கப்படுவதற்கு வேறு நாமம் கொடுக்கப்படவில்லை. (அப்.4:12) பழைய ஏற்பாட்டில் கூறப்பட்டிருக்கும் பலி முறைகள் மற்றும் போவாஸ் ரூத்தை மீட்டது போன்றவை இயேசு கிறிஸ்துவின் ஊழியத்திற்கு முன்னடையாளமாய் காணப்படுகின்றன. (லுக். 24:26,27) இயேசு கிறிஸ்துவுக்கு மட்டுமே நம்மை மீட்பதற்குரிய தகுதி காணப்படுகிறது. ஏனென்றால் குற்றமில்லாத தேவனால் மட்டுமே நம்மை பாவத்திலிருந்தும் நரகாக்கினையினின்றும் விடுவித்து மீட்க முடியும். இயேசு கிறிஸ்து மாம்சத்தில் வெளிப்பட்ட தேவனாயிருக்கிறபடியால் அவரே இதை செய்தார்.

## நம்முடைய மீட்புக்காய் இயேசு செலுத்திய கிரயம்:

இயேசு கிறிஸ்து வெள்ளியையும் பொன்னையும் கிரயமாக செலுத்தவில்லை. மாறாக தன்னுடைய சொந்த ஜீவனையே நம்முடைய மீட்புக்காக கொடுத்தார். மீட்கும் பொருளாக தன்னுடைய இரத்தத்தை கொடுத்தார். இயேசு கிறிஸ்துவின் விலையேறப்பெற்ற இரத்தத்தினால் நாம் மீட்கப்பட்டிருக்கிறோம். (1பேதுரு 1:19) நாம் நம்முடைய சொந்த கிரியைகளை நம்பாமல் (எபே. 2:8–10, தீத்து 3:5) பாவமில்லாத (2 கொரி. 5:21) தேவனுடைய பஸ்கா ஆட்டுக்குட்டியாகிய (வெளி 13:8) உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்த்த தேவ ஆட்டுக்குட்டியாகிய (யோ. 1:29) அவரை விசுவாசித்தன் மூலமாய் மட்டுமே நாம் மீட்படைய முடியும்.

## தேவன் நம்மை மீட்பதின் நோக்கம் என்ன ?

i) நம்மை நித்திய அழிவினின்று காப்பாற்ற

ii) நம்மை இருளின் அதிகாரத்தினின்று விடுதலையாக்க – கொலோ. 1:13

iii) நம் பாவங்களை மன்னிக்க – மத். 1:21, மாற்கு 2:10

iv) நம்மை சுத்திகரிக்க – 1 யோவான் 1:7

v) நம்மை பரலோகம் கொண்டு சேர்க்க – யோவான் 14:2

vi) நம்மை பரிசுத்தமாக்க – 1 கொரி. 6:19–20, தீத்து 2:13,14

**நம்முடைய மீட்புக்கான ஆதாரம்:–**

தேவன் மாம்சத்திலே வெளிப்பட்டு (1 தீமோ. 3:16) நமது மீட்புக்காக தமது ஜீவனைக் கொடுப்பேன் என கூறினார். (மாற்கு 10:45) சொன்னபடியே செய்தார்.

இயேசு கிறிஸ்து மரணத்தை வென்று உயிர்த்தெழுந்ததினாலே பிதாவானவர் இயேசு நமக்காக செலுத்தின கிரயத்தை ஏற்றுக்கொண்டார் என்பது புலனாகிறது. (பிலி. 2:6–8, ரோ. 8:34)

இயேசு கிறிஸ்துவினால் மீட்கப்பட்டோரின் மாறுதல் அடைந்த வாழ்க்கை, கிறிஸ்துவின் மீட்பின் கிரியைக்கே சான்றாயிருக்கிறது. (எ.கா. இயேசுவின் சீஷர்கள், பவுல் மற்றும் சபை சரித்திரத்தில் வாழ்ந்த பரிசுத்தவான்கள்.

**மீட்பினால் நமக்கு கிடைக்கிற ஆசீர்வாதங்கள்:**

i) நித்திய ஜீவன் – வெளி. 5:9,10

ii) பாவ மன்னிப்பு – எபே. 1:7

iii) நீதிமானாக்கப்படுதல் – ரோமர் 5:17

iv) நியாயப்பிரமாணத்தின் சாபத்தினின்று விடுதலை – கலா 3:13

v) தேவனுடைய குடும்பத்தில் அங்கத்தினராக்கப்படுதல் – கலா.4:15

vi) பாவத்தின் கட்டுகளிலிருந்து விடுதலை – 1 பேதுரு 1:14–18

vii) தேவனோடு சமாதானம் – கொலோ 1:18–20

viii) பரிசுத்த ஆவியானவரை வாசஞ்செய்ய பெறுதல் – 1 கொரி. 6:19,20

இயேசு கிறிஸ்து நம்மை மீட்டுக்கொண்டதினால் நாம் அடிமைகள் என்கிற நிலையில் இருந்து பரலோகத்தில் பிரஜைகளாயிருக்கிறோம். இதையே நாம் புதிய பாடலாக பரலோகத்தில் பாடுவோம். (வெளி. 5:9) பாவத்திற்கு அடிமைகளாயிருந்து தேவனுடைய கோபாக்கினைக்கு நியமிக்கப்பட்டிருந்த நம்மை, இயேசு கிறிஸ்து தம்மையே மீட்கும் பொருளாக கொடுத்து மீட்டு மேற்கூறிய ஆசீர்வாதங்களை நமக்கு கொடுத்திருக்கிறார். இந்த மீட்பின் செய்தியை பிறருக்கு கூறுவோம். கர்த்தரின் அன்பை மறவாதிருப்போம்.

– S. மோசஸ் ராஜ்

# தன்னம்பிக்கை ?

மக்களுக்கு புதுநம்பிக்கை கொடுக்கப்போகும் ஒரு தலைவன் 'விசுவாசம்' கொண்டவனாக இருக்க வேண்டும். தானியேல் அப்படிப்பட்ட ஒரு தலைவனாக இருந்தான் என முன்பு பார்த்தோம்.

''விசுவாசம் என்றால் என்ன ? விசுவாசம் மட்டும் ஒருவனை தலைவனாக மாற்றுமா ? என நீ கேட்பது புரிகிறது தம்பி. விசுவாசம் எனில் பொதுவாக 'தன்னம்பிக்கை' என கூறுவர். அது ஒரு பாதி உண்மையே! சரியாக கூறுவது எனில் ''இறைநம்பிக்கையுடன் தன்னம்பிக்கை'' கொள்வது தான் விசுவாசம் என்பதன் சரியான கருத்து. இதையே ''விசுவாசமானது நம்பப்படுகிறவைகளின் உறுதியும் காணப்படாதவைகளின் நிச்சயமுமாயிருக்கிறது'' என எபிரேயர் 11:1 கூறுகிறது. தானியேல் இத்தகைய ஒரு விசுவாசத்தையே தேவன் மீது கொண்டிருந்தான்.

''விசுவாசம் மட்டும் ஒருவனைத் தலைவனாக மாற்றுமா ? என உன் இரண்டாவது கேள்விக்கும் பதில் கூற விரும்புகிறேன். முன்பே கூறினேன் விசுவாசம் என்பது ''இறை நம்பிக்கையுடன் தன்னம்பிக்கை''.

இறை நம்பிக்கை என்பது விசுவாசத்தின் ஒரு பக்கம். தன்னம்பிக்கை என்பது அதின் மறுபக்கம். இந்த இரண்டும் சேர்ந்து ஒருவனை புது நம்பிக்கை கொண்ட தலைவனாக உயர்த்தும். இந்த விசுவாசம் ஒருவர் தலைவனாக வளர்வதற்கான விதை மட்டுமே. விசுவாசம் என்னும் நல்வித்து முளைத்து, வளர்ந்து ஒரு தலைவனாக ஆலமரம் போல் வளர்கிறது. தானியேல் இறை நம்பிக்கை கொண்டவன் மட்டுமல்ல தன்னம்பிக்கை உடையவன். ஆகவே தான் தன்னம்பிக்கையுடன் ''என்னை ராஜாவின் முன்பாக அழைத்துக் கொண்டு போம்; ராஜாவுக்கு அதை தெரிவிப்பேன் என்று சொன்னான்''(தானி.2:24). அவனுக்குள் இருந்த இறைநம்பிக்கை அவனுக்கு தன்னம்பிக்கை கொடுத்தது. ஆகவே ராஜாவுக்கு ஆலோசனை கொடுக்கும் ஒரு தலைவனாக தானியேல் வளர்ந்தான்.

ஆம்! இந்த சரியான தன்னம்பிக்கையின் ஊற்று இறை நம்பிக்கை ஆகும். இறை நம்பிக்கை இல்லாத தன்னம்பிக்கை அனேகரை அழிவுக்கு கொண்டு செல்லும். ஹிட்லர் இதற்கு ஒரு மோசமான உதாரணம். உலகையே தனது ''ஆட்சியின் கீழ் கொண்டு வந்து விடுவேன்''என தன்னம்பிக்கை மட்டுமே கொண்டிருந்தான். ஆனால் அவனுக்கு இறை நம்பிக்கை இல்லை. ஆகவே உலகை ஆளும்படி விரும்பிய அவனது தன்னம்பிக்கை உலக

போருக்கு காரணமானது. அநேக அழிவுக்கும் காரணமானான். இறுதியில் தன்னையே அழித்துக்கொண்டான். அதுபோல் அவனது இறை நம்பிக்கை இல்லாத தன்னம்பிக்கை அவன் தற்கொலை செய்யவும் காரணமானது.

ஆகவே தம்பி, நீ ஒரு சிறந்த தலைவனாக வளர இறை நம்பிக்கையுடன் கூடிய தன்னம்பிக்கை தேவை, தானியேல் போல்! ஒரு மனிதனுக்கு தன்னம்பிக்கை தரும் விசுவாச வித்து அவனில் வளர மிக முக்கியமான ஊட்டச்சத்து ஒன்று தேவை. விசுவாசம் வளர தேவையான அந்த ஊட்டச்சத்து என்ன ? பொறுமையாய் கேள் தம்பி! சொல்கிறேன்!

- எச்.ஆர்.கே



## மருத்துவ குறிப்பு – அன்னாசி

இந்தியாவில் பரவலாக பயிரிடப்படும் பழம் அன்னாசி. அன்னாசி பழம் மிகுந்த சத்துள்ளது. கால்சியம்–21 மி.கி, பாஸ்பரஸ்–13மிகி, மேக்னீசியம்–20 மி.கி. முதலிய பல தாதுக்கள் இதில் உள்ளன. உயிர் சத்துக்கள் எனப்படும் சில விட்டமின்களும் இதில் கணிசமாக உள்ளன. விட்டமின்–பி சத்து நிறைந்த இதனை தினமும் ஒன்று அல்லது இரண்டு துண்டுகள் சாப்பிடுவது உடலுக்கு நல்லது. சாப்பாட்டிற்கு பின் இதனை உண்டால் ஜீரண சக்தி அதிகரிக்கும். குழந்தைகளுக்கு வயிற்றில் உண்டாகும் பூச்சி தொல்லை தீர தினமும் ஒரு சிறு துண்டு அன்னாசிப் பழம் குழந்தைகளுக்கு தருவது நல்லது. ரத்த விருத்தியாக உதவும். இதில் உள்ள கால்சியம் சத்து எலும்பு வலுவாக உதவும்.

### நன்கொடை அனுப்புவோர் கவனத்திற்கு

நன்கொடை மற்றும் காணிக்கை அனுப்புவோரும், வங்கியில் காணிக்கை செலுத்துவோரும் தயவு செய்து தங்கள் பெயர் மற்றும் முழு முகவரியை எமக்கு தெரிவிக்கவும். உரிய ரசீது கொடுக்க அது உதவிகரமாக அமையும். தங்கள் உதவிக்கும் ஒத்துழைப்புக்கும் நன்றி.

**பெயர் :** Newhope Mission (நியூஹோப் மிஷன்)
**எமது வங்கி கணக்கு எண் : 254901000557777**
**வங்கி : இந்தியன் ஓவர்சீஸ் வங்கி** (IOB)
**கிளை : மிடாலக்காடு** (Midalakkadu)
IFSC Code : IOBA 000 2549

நமது மிஷன் பணிக்களங்களை நேரில் பார்வையிட்டு ஜெபிக்க உங்களை அன்புடன் அழைக்கிறோம்.
தொடர்பு எண் : **9443155120** & **9442935233**

# ஸ்திரீகளுக்குள்ளே ஆசீர்வதிக்கப்பட்ட மரியாள்

நமது கர்த்தரும் இரட்சகருமாகிய இயேசு கிறிஸ்துவின் தாயாராகிய மரியாளைக் குறித்து இந்த இதழில் தியானிப்போம். மனுக்குலத்தின் இரட்சிப்புக்காக கடவுள் தமது சொந்த குமாரனையே இப்பூவுலகத்திற்கு அனுப்பி அவர் மூலமாக நமக்கு இரட்சிப்பை அருளினார் என்று நாம் விசுவாசிக்கிறோம்.''இதோ ஒரு கன்னிகை கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறுவாள்'' (ஏசாயா 7:14) என்று உரைக்கப்பட்டதின்படி மேசியா என்னும் கிறிஸ்து தங்களது கர்ப்பத்தில் பிறந்துதிப்பார் என்று இஸ்ரவேலில் அநேக கன்னிகைகள் காத்திருந்தார்கள் என்று வரலாற்றுத் தகவுகள் கூறுகின்றன. இந்த மாபெரும் பேற்றினை பெற்றுக்கொள்ள கடவுளால் தெரிந்து கொள்ளப்பட்டவளே இந்த மரியாள்.

பரிசுத்த வேதாகமத்தில் மரியாள் என்ற பெயர் கொண்ட அநேகரை நாம் காண்கிறோம். மகதலேனா மரியாள் (லூக்கா 8:2) மார்த்தாளின் சகோதரி மரியாள் (யோவான் 12:2,3) மாற்கு என்னும் பேர் கொண்ட யோவானுடைய தாயாகிய மரியாள் (அப். 12: 12) கிலேயோப்பா மரியாள் (யோவான் 19:25) மற்றும் எங்களுக்காக மிகவும் பிரயாசப்பட்ட மரியாள் என்று பவுல் வாழ்த்தும் சகோதரி (ரோமர் 16:6) மரியாள் என்பது தமிழிலும், மரியா (maria - Letin) மரி (Marie-French), மிரியாம் (எபிரேயம்) மரியம் (அரேபியம்) உள்ளது.

## கிருபை பெற்ற மரியாள்

''கிருபை பெற்றவளே வாழ்க'' (லூக்கா 1:28) என்று கபரியேல் தூதன் மரியாளை வாழ்த்துகிறான். கிருபை என்பது மிகவும் விசேஷித்த ஒரு தயவாகும். தகுதியற்றவராக உள்ள ஒருவருக்கு கிடைக்கபெறும் பெரிய தயவே கிருபையாக எண்ணப்படுகிறது. (unmerited grace) இத்தகையதொரு தகுதியை, உலக இரட்சகரை தன் கர்ப்பத்தில் சுமக்கும் மாபெரும் சிலாக்கியத்தைப் பெற்றுக் கொண்டவளே இந்த மரியாள் – லூக்கா 1:38.

## மரியாளின் விசுவாசப்படிகள்

மரியாள்தனது அழைப்பையும் தெரிந்துகொள்ளுதலையும் உணர்ந்து கொண்டாள். அதன்படி கர்த்தருடைய சித்தத்திற்குத் தன்னைத் தாழ்மையாக ஒப்புக்கொடுத்தாள் என்பதாகும்.

தேவதூதர்கள் வாயிலாகக் கேட்டறிந்த நற்செய்தியின்படி பெத்லகேமிலே மாட்டுத்தொழுவத்திலே பிறந்த பாலகன் இயேசுவை மேய்ப்பர்கள் காண வந்ததையும், அவர்கள் அந்தப் பிள்ளையைக் குறித்துச் சொல்லப்பட்ட காரியங்களையும் கேள்விப்பட்ட மரியாள் இவைகளைத் தன் இருதயத்திலே வைத்து சிந்தனை பண்ணினாள் என்று லூக்கா 2:19ல் வாசிக்கிறோம்.

எருசலேம் தேவாலயத்தில் பாலகன் இயேசுவை சிமியோன் ஆசீர்வதித்து அவருடைய தாயாகிய மரியாளை நோக்கிக் கூறின தீர்க்கதரிசன வசனங்கள், இயேசு இரட்சண்யத்தின் அடையாளம் என அறிவிக்கின்றன. இந்த காரியங்களை மரியாள் தன் மனதிலே சுமந்து திரிந்தாள். லூக்கா 2:33ல் ''அவரைக்குறித்து சொல்லப்பட்டவைகளுக்காக யோசேப்பும் அவருடைய தாயாரும் ஆச்சரியப்பட்டார்கள்'' என்று வாசிக்கிறோம்.

இயேசு பன்னிரெண்டு வயதானபோது எருசலேம் தேவாலயத்தில் போதகர் நடுவில் உட்கார்ந்து வசனங்களை விவாதித்துக் கொண்டிருந்ததையும், ''என் பிதாவுக்கடுத்தவைகளில் நான் இருக்க வேண்டியதென்று அறியீர்களா'' எனக்கூறியதையும் கண்ட மரியாள் ''இந்த சங்கதிகளையெல்லாம் தன் இருதயத்திலே வைத்துக் கொண்டாள் (லூக்கா 2:51) என்று காண்கிறோம்.

## மரியாளின் விசுவாச செயல்பாடு

இயேசு விசேஷித்த பிறவியானவர் என்பது மரியாளுக்கு நன்கு தெரிந்திருந்தது. கானாவூர் கல்யாண வீட்டின் அற்புதத்தின் போது அவள் நடந்து கொண்ட முறை (யோவான் 2–ம் அதிகாரம்) இயேசு அற்புதம் நடப்பிக்க வல்லமையுள்ளவர் என்பதை அவள் அறிந்திருந்து அவரிடமிருந்து ஒரு அற்புதத்தை எதிர்பார்க்கிறதாக அமைகிறது.

மத்தேயு 12:46–50 வசனங்களில் அவரின் தாயாரும் சகோதரரும் அவரைத் தேடி வந்த போதிலும் ''பரலோகத்திலிருக்கிற என் பிதாவின் சித்தத்தின்படி செய்கிறவன் எவனோ அவனே எனக்குச் சகோதரனும் சகோதரியும் தாயுமாய் இருக்கிறான்'' என்று இயேசு சொன்ன போது அவர்கள் அவரை நன்கு புரிந்து கொண்டார்கள் என்பதை காண்கிறோம்.

இயேசுவின் சிலுவை வரையிலும், ஏன் கல்லறை வரையிலும் அவரது தாயாகிய மரியாள் தொடர்கிறாள். சந்தேகங்கள் அவர் மனதை உறுத்திய போதிலும், அவர் விசுவாசத்தை விட்டுவிடவில்லை. அதன் பயனாக இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலையும் காணும் பாக்கியத்தை பெறுகிறார். (மத்.28:1–6) இங்கே அவள் 'மற்ற மரியாள்' என குறிப்பிடப்படுகிறாள்.

இயேசுவின் பரமேறுதலுக்குப் பிறகு மரியாள் சீடர்களின் கூட்டத்திலே காணப்படுகிறார். (அப்.1:14) அவர் மிஷனெரியாக இப்போது மாறிவிட்டார்.

## மரியாளின் அழைப்பின் உறுதி

''கிருபை பெற்றவளே வாழ்க'' என்று வாழ்த்தப்பட்டவர் இயேசுவின் சிலுவையினருகே நின்று கொண்டிருந்தார். (யோவான் 19:25–27). இயேசு தனது கடைசி நிமிடங்களிலும் தனது அன்பான தாயை நினைவு கூர்ந்து அவருடைய பராமரிப்பை தனது அன்பான சீடனிடம் ஒப்புக்கொடுத்தார் என வாசிக்கிறோம்.

தனது உன்னத அழைப்பை உணர்ந்து, தாழ்மையுடனும், விசுவாசத்துடனும், அர்ப்பணிப்புடனும் செயல்பட்ட நமது ஆண்டவராகிய இயேசுவின் தாயாகிய மரியாளை நாம் நினைவு கூர்ந்து, அவரது குணநலன்களை ஆராய்ந்து, கர்த்தருக்குள் நம்மைத் திடப்படுத்திக் கொண்டு விசுவாசத்தில் வளருவோமாக! **– R.M.**

# மண்ணிலிருந்து மனிதன் படைக்கப்பட்டானா ? இதோ சான்றுகள்

70 கிலோ கொண்ட மனிதன் மண்ணிலிருந்து கிடைக்கும் கீழ் கண்ட தாது பொருட்களை தனது உடலில் கொண்டுள்ளான் என அறிவியல் கூறுகிறது. இது மனிதன் மண்ணிலிருந்து படைக்கப்பட்டான் என்னும் பைபிள் கூற்றுக்கு ஒரு வலுவான சான்று.

| | | |
|---|---|---|
| 1. | கார்பன் | – 16 கிலோ |
| 2. | நைட்ரஜன் | – 1.8 கிலோ |
| 3. | கார்சியம் | – 1.0 கிலோ |
| 4. | பாஸ்பரஸ் | – 780 கிராம் |
| 5. | பொட்டாசியம் | – 140 கிராம் |
| 6. | சோடியம் | – 100 கிராம் |
| 7. | குளோரின் | – 95 கிராம் |
| 8. | மக்னீசியம் | – 19 கிராம் |
| 9. | இரும்பு | – 4.2 கிராம் |
| 10. | புளூரின் | – 2.6 கிராம் |
| 11. | துத்தநாகம் | – 2.3 கிராம் |
| 12. | சிலிக்கான் | – 1.0 கிராம் |
| 13. | ரூபிடியம் | – 0.68 கிராம் |
| 14. | ஸ்ட்ரோனடியம் | – 0.32 கிராம் |
| 15. | ப்ரோமின் | – 0.26 கிராம் |
| 16. | ஈயம் | – 0.12 கிராம் |
| 17. | தாமிரம் | – 72 மி.கி. |
| 18. | அலுமினியம் | – 60 மி.கி. |
| 19. | காட்மியம் | – 50 மி.கி. |
| 20. | செரியம் | – 40 மி.கி. |
| 21. | பேரியம் | – 22 மி.கி. |
| 22. | அயோடின் | – 20 மி.கி. |
| 23. | தகரம் | – 20 மி.கி. |
| 24. | டைட்டானியம் | – 20 மி.கி. |
| 25. | போரான் | – 18 மி.கி. |
| 26. | நிக்கல் | – 15 மி.கி. |
| 27. | செனியம் | – 15 மி.கி. |
| 28. | குரோமியம் | – 14 மி.கி. |
| 29. | மங்கனீஸ் | – 12 மி.கி. |
| 30. | ஆர்சனிக் | – 7 மி.கி. |
| 31. | லித்தியம் | – 7 மி.கி. |
| 32. | செசியம் | – 6 மி.கி. |
| 33. | பாதரசம் | – 6 மி.கி. |
| 34. | ஜெர்மானியம் | – 5 மி.கி. |
| 35. | மாலிப்டினம் | – 5 மி.கி. |
| 36. | கோபால்ட் | – 3 மி.கி. |
| 37. | ஆண்டிமணி | – 2 மி.கி. |
| 38. | வெள்ளி | – 2 மி.கி. |
| 39. | நியோபியம் | – 1.5 மி.கி. |
| 40. | சிர்கோனியம் | – 1 மி.கி. |
| 41. | லித்தானியம் | – 0.8 மி.கி. |
| 42. | டெல்லூரியம் | – .07 மி.கி. |
| 43. | இட்ரியம் | – 0.6 மி.கி. |
| 44. | பிஸ்மத் | – 0.5 மி.கி. |
| 45. | தால்வியம் | – 0.5 மி.கி. |
| 46. | இண்டியம் | – 0.4 மி.கி. |
| 47. | தங்கம் | – 0.4 மி.கி. |
| 48. | ஸ்காண்டியம் | – 0.2 மி.கி. |
| 49. | தாண்தளம் | – 0.2 மி.கி. |
| 50. | வாளடியம் | – 0.11 மி.கி. |
| 51. | தோரியம் | – 0.1 மி.கி. |
| 52. | யுரேனியம் | – 0.1 மி.கி. |
| 53. | சமாரியம் | – 50 மி.கி. |
| 54. | பெல்யம் | – 36 மி.கி. |
| 55. | டங்ஸ்டன் | – 20 மி.கி. |
| 56. | ஆக்சிஜன் | – 43 கிலோ |
| 57. | நைட்ரஜன் | – 7 கிலோ |

இந்த தனிமங்களில் வாயு நிலையில் உள்ள ஆக்சிஜன் மற்றும் ஹைட்ரஜன் தவிர அனைத்தும் மண்ணிலிருந்து கிடைப்பவை. மண்ணோடு கலந்துவிடுபவை. மண்ணிலிருந்து எடுக்கப்பட்ட மனிதன் மண்ணுக்கே திரும்புவான் அல்லவா ? – உடல் எடைக்கு ஏற்ப அளவீடுகள் சிறிதுவேறுபடலாம். ஆயினும் மண்ணிலிருந்து படைக்கப்பட்டவன் மனிதன் என்பதற்கு இது வலுவான சான்று அல்லவா!

- ஆதாரம் Whats app

“இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள் ....” (1 தெச.5:17)

# ஜெப விண்ணப்ப குறிப்புகள்

☞ கிருஷ்ணகிரி மாவட்டத்தில் சபை கட்டுவதற்கு உள்ள தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம்.

☞ சகோதரி. டெய்சி அவர்களின் கேன்சர் வியாதியிலிருந்து தேவன் பரிபூரண சுகம் தர தொடர்ந்து ஜெபிப்போம்.

☞ கர்த்தருக்கு சித்தமானால் விரைவில் கட்டப்பட உள்ள (ஆந்திராவில்) சபை பணிகள் தடை இல்லாமல் ஏற்ற வேளையில் கட்டி முடிக்கப்பட ஜெபிப்போம்.

☞ தெலுங்கானா மாநிலத்தில் தொடங்கப்பட திட்டமிட்டுள்ள மிஷன் பணியாளர்கள் மருத்துவ உதவி திட்டம் பலருக்கு பயனுடையதாக அமைய ஜெபிப்போம்

☞ உத்திர பிரதேசத்தில் சுவிசேஷ பணியாளர்கள் மற்றும் கிறிஸ்தவர்கள் எதிர்கொள்ளும் நெருக்கடிகள் மாறவும், இந்தியாவை வல்லரசாக்க வல்லமையுள்ள சுவிசேஷம் மேலும்வளரவும் ஜெபிப்போம்.

☞ பஞ்சாப் மாநிலத்தில் தொடங்க திட்டமிடப்பட்டுள்ள மிஷனெரி பயிற்சி பலருக்கு பயனளிக்கும்படி ஜெபிப்போம்.

☞ சத்தீஸ்கர் மாநிலத்தில் சகோ.ஜெபஸ்டீன் அவர்கள் பணிக்களத்தில் கட்டப்பட்டு வரும் சபை கட்டிட பணிகள் தேவை சந்திக்கப்பட ஜெபிப்போம்.

☞ ஜம்மு காஷ்மீர் மாநிலத்தில் நம் வீரர்கள் மீது கல்லெறி சம்பவங்கள் நிறுத்தப்பட்டு அமைதி திரும்பி சுவிசேஷம் வளரும்படி ஜெபிப்போம்.

☞ கேரள மாநிலத்தில் கர்த்தரின் பணி செய்யும் சகோ. சஜித் அவர்களுக்கு எற்ற வாழ்க்கைத் துணை அமைய ஜெபிப்போம்.

☞ உண்டியல் உதவி செய்த சகோ. பாலகிருஷ்ணன் அவர்கள் குடும்பத்தை கர்த்தர் ஆசீர்வதிக்கும்படி ஜெபிப்போம்.

## ஜெப மற்றும் வேதாகம ஆலோசனை

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே!

உங்கள் ஜெப தேவைகள் மற்றும் வேதாகம ஆலோசனைகளுக்கு எங்களை தொடர்பு கொள்ளவும். ஜெபித்து ஆலோசனை கூறி உதவ ஆயத்தமாயிருக்கிறோம்.

**தொடர்பு எண் : 9442935233**

# வேதாகம வினா – விடை போட்டி

வேதாகம பகுதி : – எரேமியா

1. எரேமியா இரண்டாவது முறை கண்டது என்ன ?
2. கர்த்தருடைய சிங்காசனம் எது ?
3. வீடு எதினால் நிறைந்திருக்கிறது ?
4. சாப்பானுடைய மகன் பெயர் என்ன ?
5. பொய்யை நம்பும்படி செய்தவர் யார் ?
6. கர்த்தருடைய பெரிய காற்றின் பெயர் என்ன ?
7. பத்திரம் என்பது எங்கு உள்ளது ?
8. எகிப்து தேசத்தில் இருந்த சிலையின் பெயர் ?
9. இடறி விழுகிறவன் யார் ?
10. ஜனங்களுக்கு ஆகாரம் இல்லால் போன மாதம் எது ?


விடைகளை அனுப்ப வேண்டிய முகவரி

**S. Vasantha Nesam**

23- Eastaff Street, Nagercoil - 629 001

Cell : 9789183072


விடைகள் வந்துசேர வேண்டிய கடைசி நாள் :**ஆகஸ்ட் 30, 2017**

**இதழ் 1 – சரியான விடை எழுதியவர்கள்**

1. Mrs. பமிலா எட்வின்
2. Mrs. சந்திரமதி ராஜா
3. Mrs. லலிதா சிங்
4. Mrs. ஜரின் மோன்ராஸ்
5. Mrs. சாந்தி சாலமன்
6. Mrs. ஷீபா மோகன்

**கடந்த இதழ் விடைகளுக்கான வசன பகுதி**

1. நீதி. 14:29, 2. நீதி. 13:25, 3. நீதி. 15:19, 4. நீதி. 5:15
5. நீதி. 20:29, 6. நீதி. 28:20; 22:9, 7. நீதி. 25:5, 8. நீதி. 15:18,
9. நீதி. 27:3, 10. நீதி. 29:23; 13:18

**குறிப்பு:**

ஆயுள்சந்தா ரூ.2000/– செலுத்துபவர்களுக்கு புது நம்பிக்கை வெளியீடுகள் அனைத்தும் இலவசமாக அனுப்பித் தரப்படும்.

# அஞ்சல் வழி வேதாகம பயிற்சி

**வேதாகம கல்லூரி படிப்பு மையங்கள் :**

நாகர்கோவில், மார்த்தாண்டம், இரணியல், திருநெல்வேலி, கருங்கல், ஈரோடு, திருப்பூர், திருவண்ணாமலை, பஞ்சாப்.

இறையியல் மற்றும் வேதாகமத்தை முறைப்படி படிக்க ஓர் அரிய வாய்ப்பு. தேவனுடைய வார்த்தை தெளிவாக கற்று தேற உதவும் வகையில் கீழ்கண்ட பயிற்சிகள் நேரடி வகுப்பு மற்றும் அஞ்சல் வழியாக வழங்கப்பட்டு வருகிறது. ஆர்வமுள்ள அனைவரும் படிக்கலாம்.

| படிப்பு | காலம் | தகுதி |
|---|---|---|
| Bachelor of Theology | 3 ஆண்டுகள் | +2 தேர்ச்சி |
| Bachelor of Bible Studies | 2 ஆண்டுகள் | தமிழ் படிக்க தெரிந்தவர்கள் |
| Master of Divinity | 2 ஆண்டுகள் | B.Th |
| Master of Ministry | 2 ஆண்டுகள் | B.B.S |
| Master of Theology | 2 ஆண்டுகள் | M.Div. |
| Diploma in Biblical Hebrew | 2 ஆண்டுகள் | தமிழ் தெரிந்தவர்கள் |



ஆர்வமுள்ள கிறிஸ்தவ ஆண் / பெண் இருபாலரும் படிக்கலாம். தமிழ் மற்றும் ஆங்கில வழியில் படிக்க வசதியுண்டு. குறைந்த கட்டணம் தரமான பயிற்சி.

மேலும் விபரங்களுக்கு:–

**Director**
**CALS - Bible Course**
Harris House,
8/69-c, Manvilagam, Reethapuram P.O.
K.K.Dist - 629 159
Cell : 9442935233

# வேதாகமம் வழங்கி வெளிச்சம் ஏற்றுவோம்

## ஒரு குடும்பம் ~ ஒரு வேதாகமம்



உம்முடைய வசனம் என் கால்களுக்கு தீபமும் பாதைக்கு வெளிச்சமுமாயிருக்கிறது. (சங். 119:105). தேவனுடைய வார்த்தை நமது வாழ்விற்கு வழிகாட்டும் ஒளி. அந்த வெளிச்சத்தை கண்டடைந்த நாம் அந்த உன்னத வெளிச்சத்தை பிறருக்கும் காட்ட ஒரு அரிய வாய்ப்பு.

நமது நாட்டில் இன்னும் வேதாகமம் இல்லாத எத்தனையோ ஜனங்கள் மிஷனரி பணிக்களங்களில் உள்ளனர். "ஒரு குடும்பம் – ஒரு வேதாகமம்" திட்டத்தின் மூலம் நமது குடும்பம் சார்பாக மிஷனரி பணிக்களங்களில் வாழும் ஏழை கிறிஸ்தவ குடும்பத்துக்கு அவரது தாய்மொழியில் ஒரு வேதாகமம் வழங்க முன்வருவோம்.

ஒரு வேதாகமத்தின் விலை ரூ. 160/– மட்டும். (கட்டி அட்டை பைபிள் ரூ.175/–)

வேதாகமம் பரிசளிக்க விரும்புவோர் தொடர்பு கொள்ள வேண்டிய எண்: 7502071054

# தொழுநோயாளிகளின் குழந்தைகள் இல்லம்

ஆந்திர மாநிலத்தில் இந்த இல்லம் 34 குழந்தைகளுடன் செயல்பட்டு வருகிறது. இவர்களின் பெற்றோர் தொழுநோயாளிகள் ஆனபடியினால் அவர்களால் வேலை செய்து இக்குழந்தைகளின் அடிப்படை தேவைகளான உணவு மற்றும் உடை போன்றவைகளை சந்திக்க இயலவில்லை. பள்ளிச் செல்லும் நாட்களில் மட்டும் இக்குழந்தைகளுக்கு பள்ளியில் மதிய உணவு வழங்கப்படுகிறது. ஆகவே இக்குழந்தைகள் காலையிலும் இரவிலும் உணவு கிடைக்காமல் பசியால் அல்லல் படுகின்றனர். இக்குழந்தைகளின் பரிதாப நிலையைக் கண்ட எமது மிஷனரி மற்றும் சபையார் இக்குழந்தைகளுக்கு காலையிலும் இரவிலும் தங்களால் இயன்ற அளவு உணவு சமைத்து கொடுத்து உதவுகின்றனர். இருப்பினும் இந்த ஏழை சபையால் குழந்தைகளுக்கனா உணவு தேவைகளை தினமும் சந்திக்க இயலாமல் சிரமப்படுகின்றனர். இந்த ஏழை குழந்தைகளுக்காக உதவும் இந்த சபையுடன் இணைந்து நீங்களும் உதவலாம். இக்குழந்தைகளுக்காய் உங்கள் தனி, குழு, சபை மற்றும் குடும்ப ஜெபங்களில் ஜெபிக்க அன்புடன் வேண்டுகிறோம்.

ஒரு குழந்தைக்கான மாத உணவு தேவை ரூ. 500/–

இக்குழந்தைகளை சந்திக்க மற்றும் உதவ விரும்புபவர்கள் தொடர்பு கொள்ளவேண்டிய எண்: 9443155120





ஆந்திர மாநிலம் கிழக்கு கோதாவரி மாவட்டத்திலுள்ள
ஒரு கிராம சபை இந்த மூங்கில் ஓலை குடிசையில் கூடி வருகிறது.
உடனடியாக சபை கட்டப்பட வேண்டிய மிஷனரி பணிக்களம்






Editor : S. Moses Raj, (Mobile : 7502071054),
Published by : New Hope Mission,
75/33, Isaac St. Nagercoil - 629 001.
Contact : 9442935233
e-mail: newhopebharat@gmail.com
website : www.newhopebharat.org
Printed at : Latha Press, 9791659601